ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2038
ஆனி - ஜீன் 2007



# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

30-5-2007 விசாக விழாவில் நீதி அரசர்
எம். சொக்கலிங்கம் அவர்கள்
இறைநீதி அண்ணல் பட்டம் பெறுதல்

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை | | | |
| வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

### சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆதீன இணையதள முகவரி :

website : www.kundrakudiadheenam.org.

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2038 (சர்வசித்து) மாதம் : ஆனி

மலர் : 21 இதழ் : 6




## அருளியல், அறிவியல், அரசியல் போற்றும் அற்புதத் துறவி!



இந்தியாவின் புகழ்மிக்க புனிதமான திருத்தலம்! வடக்கையும், தெற்கையும் இணைக்கின்ற ஆன்மீக மையம்! உலகையே உற்று நோக்கவைக்கும் மகத்தான சிறப்பைப் பெற்றது! படிப்புச் செலவிற்காக அதிகாலைப் பொழுதில் தினந்தோறும் செய்தித்தாள் போட்ட சிறுவன் இன்று தினம்தோறும், தினந்தோறும் தினத்தாள்களில் தலைப்புச் செய்தியாக மாறிப்போனான்! கடலால் சூழப்பட்ட தீவின் கடற்கரைப் படகோட்டிக்கு மகனாகப் பிறந்தவர் இந்தியாவின் குடிஅரசுக் கப்பலைச் செலுத்துகின்ற மாலுமியாக உயர்ந்தார்! அவர்தான் உலகம் எந்நாளும் ஏத்திப் போற்றும் அற்புதக் குடியரசுத்தலைவர் மேதகு டாக்டர் அப்துல்கலாம்!

வேதங்கள், ஆகமங்கள், மறைகள், மார்க்கங்கள் காட்டுகின்ற வாய்மையின் சாரத்தை இறைமையின் உணர்வால் உள்வாங்கிக்கொண்டு இயல்பாய் மானுட வாழ்க்கை நடத்திய இலட்சியப் பெற்றோர்! உடன் பிறந்த தம்பியின் கல்வி வளர்ச்சிக்கு எந்தத் தியாகமும் செய்யத் தயாரார்ய் இருந்த தமக்கையார், ஆசிரியராய் வழிகாட்டியாய் இருந்த தமக்கையின் கணவர், இந்த

அரிய, எளிய குடும்பச் சூழலில் இருந்து தான், மண் வைரத்தை மடியில் முடிந்து வைத்திருப்பதைப்போல் கடல், முத்தைத் தன் கக்கத்தில் இடுக்கி வைத்து இருப்பதைப் போல, காலத்தால் அப்துல்கலாம் என்று அழைக்கின்ற அந்த அற்புத ஞானி உலகத்திற்கு கிடைத்தார்!

இராமேசுவரம் தீவு உவர்மண் பூமி மட்டும் அல்ல! உயர்ந்த உள்ளங்கள் வாழும் ஞானபூமி! கலாமும், இராமநாத சாஸ்திரிகளும் ஒரே பலகையில் அமர்ந்து கற்பதைப் பொறுத்துக்கொள்ள முடியாமல், பேதக் கண்களால் பார்த்த ஆசிரியரை, மனிதர்களிடையே பேதம் பார்க்கும் நிலை நீடித்தால் இராமேசுவரம் தீவை விட்டு வெளியேற வேண்டும் என்று கண்டிப்பாய் உத்தரவிட்ட இராமநாத சாஸ்திரியின் தந்தை இலட்சுமண சாஸ்திரியின் உள்ளம் எப்படிப்பட்டது? தீவுகளாய் வாழும் மனித உள்ளங்கள் நடுவே தீவுக்குள் உலகமானுடப் பார்வை பார்த்த இலட்சுமண சாஸ்திரியும், ஜெயினுல்லாபுதீனும் இணைந்து வாழ்ந்த ஞானபூமி இராமேசுவரம்! சிவசுப்பிரமணிய ஐயர், அய்யாத்துரை, சாலமன் போன்ற முற்போக்கான சிந்தனை உடைய ஆசிரியர்களின் உறவு சிறுக, சிறுக கலாமை செதுக்கியது!

தோல்வி கண்டு துவளாத உள்ளம், இமயமலைச்சாரலில் சுவாமி சிவானந்தரிடம் பெற்ற ஆன்மஞானம் புடம் போட்ட பொன்னாய் ஒளிரச்செய்தது. அருளியலுக்கும், அறிவியலுக்கும் வெற்றி, தோல்வி என்பது கிடையாது! சரிந்து விழும்பொழுதெல்லாம் இறைமை உணர்வால் ஊன்றிக்கொண்டு நம்பிக்கைக் கயிற்றை பற்றிக் கொண்டு உயர, உயர ஏறுவது! 1700 கண்டுபிடிப்புகளும் ஒரு கூரையின் கீழ் எரிந்த பொழுது "என் தவறுகள் எரிந்து போயின! புதியவற்றைக் காண்கிறேன்" என்று ஆனந்தக் கூத்தாடிய தாமஸ் ஆல்வா எடிசனிடம் எந்தத் தோல்வியின் உள்ளத்தைக் காணமுடிந்தது? ஊர்ந்தும், தவழ்ந்தும், உருண்டும், தலையால் நடந்தும் இறைமையைக் காணச் சென்ற புனிதவதி காரைக்கால் அம்மையிடம் எந்தத் துன்பத்தைக் காணமுடிந்தது! வழுக்கி விழாமல் காப்பது இறைமையின் உணர்வு. இரண்டும் இணையும் பொழுது தான் ஆன்மீகமும், அறிவியலும் சந்திக்கின்றன.

உலக விண்வெளி அறிவியல் தொழில் நுட்பத்தளத்தில் ஒண்டுவதற்கு கூரை இல்லாத இந்தியாவின் விண்வெளித்துறையை இன்று உலக நாடுகள் பலவும் தங்களின் விண்வெளித்துறை

வளர்ச்சிக்கு பயன்படுத்தும் மகத்தான சாதனை வளர்ச்சிக்கு அப்துல்கலாம் என்ற அறிவியல் ஞானியே காரணம் ஆவார்! விண்வெளி ஆராய்ச்சித்துறையில் மகத்தான வெற்றிகளுக்கும், சாதனைகளுக்கும் கண்டுபிடிப்புகளுக்கும் மார்தட்டிக் கொள்ளாத அடக்கமான இந்த மாமனிதர் விண்வெளித்துறையில் பயன்படுத்தும் ஒருவகை உலோகம், ஊனம் உற்ற ஏழைக் குழந்தைகள் நடப்பதற்கு ஊன்றுகோலாய்ப் பயன்படுத்தப்படுவது கண்டு ஆன்ம நிறைவு கொள்கின்றார்!

குழந்தைகளையே நேசித்தும்! அவர்களையே வாசித்தும் உறவாடித்துள்ளும் உயர்ந்த குழந்தை உள்ளத்துக்கு உரியவர்!

*இராமன் வனவாசம் சென்றதும்*
*பரதன் பாதுகை அரியணை ஆண்டதும்*
*இளங்கோ அடிகள் அரியணை துறந்ததும்*
*சித்தார்த்தன் அரண்மனை மறந்ததும்*

என்றோ நிகழ்ந்த இதிகாச வரலாற்று நிகழ்வுகள் அல்ல! இன்றும் நடக்கும் சத்தியத்தின் சாதனை. செல்வம், செல்வாக்கு, புகழ், விளம்பரம் என்று விரும்புகின்ற எல்லாம் ஈட்டித்தரும் அதிகார எந்திரத்தின் உச்சபட்ச பதவி நாற்காலியில் பசை போல் ஒட்டிக்கொள்ளும் வழக்கமான மனிதர்கள் நடுவில் தாமரை இலைக்கும் தண்ணீருக்கும் உள்ள உறவுபோல் பதவி நாற்காலியில் பற்றின்றிப் பணிகள் ஆற்றிய - துரிசுகள், தூசுகள், குற்றங்கள், குறைகள், கறைகள் இல்லா நிறை மாமனிதர்!

*குழந்தைள் போற்றும் குழந்தை உள்ளம்!*
*கவிஞர்கள் போற்றும் கவிதை உள்ளம்!*
*அரசியல் வணங்கும் அரிமா உள்ளம்!*
*அறிவியல் ஆராதிக்கும் அறிவு உள்ளம்!*
*அருளியல் அரவணைக்கும் அன்பு உள்ளம்!*
*தொண்டு உள்ளம்! தூய உள்ளம்!*
*வாழி பல்லாண்டு!*

அருளியல், அறிவியல், அரசியல் போற்றும் அற்புதத்துறவியே! வாழி பல்லாண்டு!

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## 76. பொருள் செயல்வகை

உலக இயக்கம் உணவினாலும் மற்ற நுகர் பொருள்களாலும் ஆயது. மானுடம் உண்டு, உடுத்து, நுகர்ந்து வாழ்தலுக்குரிய பொருள்களைப் படைத்தல் பொருள் செய்தலாகும்.

*பொருள்அல் லவரைப் பொருளாகச் செய்யும்*
*பொருள்அல்லது இல்லை பொருள்.* (751)

பொருள் போலக் கருதிப் பேணத்தக்க தகுதி பல இல்லாதாரையும் பொருள் போலப் பெருமைப்படுத்தி உயர்த்தும் பொருளைவிடச் சிறந்த பொருள் வேறு ஒன்றும் இல்லை.

தரமான நுகர்வால் வளமும் வலிமையும் நிறைந்த வாழ்வு அமைவத. ு் "பொருள்" ஆகிவிடுகிறது.

*இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை*
*எல்லாரும் செய்வர் சிறப்பு.* (752)

எவ்வளவு பெருமைக்குரியராக இருந்தாலும் பொருள் வளம் இல்லாதவரை எல்லோருமே இகழ்ச்சி செய்வர். எவ்விதத் தகுதியும் இல்லாதவர் எனினும் பொருள் வளம் பெற்றிருப்பவரை எல்லாரும் சிறப்புச் செய்வர்.

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் - இந்த நடைமுறையில் பிழையில்லை. தகுதி பல உடையான் இல்லாதவன் ஆனது எப்படி?

செல்வரை எல்லாரும் செய்வர் சிறப்பு - என்பது அறிவுக்கு முரண்பட்ட நிலை. இங்ஙனம் சிறப்பிக்கப்படுதல் முறையன்று. "பொருட்செல்வம் பூரியார் கண்ணும் உள" என்னும் குறளினை அறிக.

*பொருள்என்னும் பொய்யா விளக்கம் இருள்அறுக்கும்*
*எண்ணிய தேயத்துச் சென்று.* (753)

பொருள் என்று போற்றப்பெறும் அணையா விளக்கு எண்ணிய் தேசம் தோறும் சென்று பகையை மாற்றும்.

பொருள் - திசைதோறும் அறிமுகப்படுத்தி வளர்க்கும் சாதனம் என்றும் கொள்ளலாம்.

*அறன்ஈனும் இன்பமும் ஈனும் திறன்அறிந்து*
*தீதுஇன்றி வந்த பொருள்.* (754)

ஒருவன் தீவினையை விட்டு ஈட்டிய பொருள் அவனுக்கு அறத்தினையும் கொடுக்கும்; இன்பத்தினையும் கொடுக்கும்.

திறனறிந்து தீதின்றி வந்த பொருள் உழைப்பறிந்து உழைப்பின் வாயிலாகச் சுரண்டப்படும் தீமையின்றி வந்த பொருள் என்ற கருத்தாகக் கொள்ளலாம்.

"தீதின்றி வந்த பொருள்" பிறர் பங்கைத் திருடியதால் வந்ததல்ல; அழக்கொண்டதுமல்ல.

*அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்*
*புல்லார் புரள விடல்* (755)

பகைப் புலத்து மக்களிடம் காட்டும் அருளொடும், தன் நாட்டு மக்களிடம் காட்டும் அன்பொடும் வராத பொருளாக்கத்தை நல்ல அரசர்கள் ஏற்கமாட்டார்கள்; கைவிட்டுவிடுவார்கள்.

"அருளொடும்" என்பதற்குத் தம் குடிமக்களிடத்துச் செய்யும் அருளொடும் என்று பொருள் கூறுவர். தொடர்பிலார் மாட்டு நிகழ்வதே அருள். தன் நாட்டு மக்களைத் தொடர்பில்லாதாவர் என்று கூறமுடியாது. ஆதலால் பகைப்புலத்து மக்களிடம் காட்டும் அருள் என்று கூறுவது பொருத்தமாகும். பகைப்புலத்து மக்களிடம் கொஞ்சமும் இரக்கமின்றி வீடழித்தல், உழுது வெள்ளெருக்கு விதைத்தல் போன்ற கொடுஞ்செயல்கள் என்பதை வரலாற்றில் அறிக.

"வாராப் பொருளாக்கம்" - என்றதால் அரசரின் படைவீரர்கள் ஊக்கமிகுதியால் தீயவழிகளில் பொருள் ஈட்டிக்கொண்டு வருவதை ஏற்கார் என்று பொருள் கொள்ளப்பெற்றது.

*உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த்*
*தெறுபொருளும் வேந்தன் பொருள்.* (756)

யாரொருவர் உரிமை கொண்டாடாமல் வந்து சேரும் பொருளும், சுங்கம், தண்டம் வழிவரும் அரசுக்குரிய பொருள்கள்.

வழியுரிமையுடையோர் இல்லாமை வழி கிடைக்கும் பொருள், உறுபொருள்.

வர்த்தகத்தில் உள்நாட்டு - வெளிநாட்டு வர்த்தகத்திற்குத் தண்டல் செய்யப்படுவது சுங்கவரி - ஆயம் என்று கூறுவர்.

இன்று உள்நாட்டில் பயன்படும் பொருளுக்கும் கூடச் சுங்கம் இருக்கிறது.

*அருள்என்னும் அன்புஈன் குழவி பொருள்என்னும்*
*செல்வச் செவிலியால் உண்டு.* (757)

அன்பு என்று சொல்லப்பெறும் தாய் பெற்ற அருள் என்னும் பிள்ளை பொருள் என்னும் செவிலியால் வளர்க்கப்படும்.

உயிர்கள் மாட்டு நிகழும் உணர்வே அருள். இந்த அருள் செயற்பாட்டுக்கு வரவேண்டுமாயின் பொருள் வேண்டும்.

பொருளுடைமையைப் போற்றினால்தான் அன்பும் அருளும் பயன்படும்.

*குன்றுஏறி யானைப்போர் கண்டற்றால் தன்கைத்துஒன்று*
*உண்டாகச் செய்வான் வினை.* (758)

குன்றின் உச்சியில் ஏறிப் பத்திரமாக நின்று கொண்டு யானைகளின் போரைப் பார்ப்பது போன்றது தன்கையில் பொருள் உண்டாகுமாறு செயல் செய்வானது வேலை.

யானைப் போரைத் தரையில் நின்று பார்த்தால் அச்சம் தோன்றலாம். போரிடும் யானைகள் தறி கெட்டு ஓடுவதால் தீமை விளையும். ஆதலால் மலையில் ஏறி யானைப் போர் பார்ப்பது தற்காப்பு ஆகும். தற்சார்பான பொருள்நிலை உருவாக்கிக் கொள்ளும் வகையில் தொழில் செய்வது பாதுகாப்பான வாழ்க்கை முறை. அதாவது தற்சார்பான பொருளியல் என்பது கருத்து.

*செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்*
*எஃகுஅதனின் கூரியது இல்.* (759)

பொருளைச் செய்க. பகைவரின் செருக்கை அறுப்பதில் பொருளினும் கூரிய படைக்கலம் யாதும் இல்லை.

"பொருள்" - நுகர்பொருள்களாகும்.

உணவுப் பொருள்களில் தன்னிறைவு பெற்ற நாடு, பகைவரால் அழிக்கப் பெற முடியாது. இது பழைய கருத்து. இது ஏவுகணை யுகம்.

*ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு எண்பொருள்*
*ஏனை இரண்டும் ஒருங்கு.* (760)

பயன்படு பொருளை மிகுதியும் தேடிச் சேர்த்தவருக்கு மற்று அடைய வேண்டிய பொருள்கள் இரண்டும் ஒருங்கே வந்து சேரும்.

மற்று இரண்டாவன அறமும் இன்பமுமாம்.

*(தொடரும்)*

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# கம்பன் என்றொரு மானிடன்

(தமிழாகரர்.பேராசிரியர். **சாமி. தியாகராசன்**)

"அன்ன" என்ற சொல் இராமன் கூறியவற்றையே சுட்டி நிற்பதாலும், இராமன் கூறிய விடைகளையே வாலி அமையக் கேட்டான் என்பதாலும், நீ கூறியது அனைத்தும் உண்மையாகவே ஆகட்டும் எனக் கூறுவதாலும் இலக்குவன் விடையில் வாலி மனத்தைச் செலுத்தவில்லை என்பது தெளிவு.

இலக்குவன் விடைதான் இராமன் மறைந்து நின்றதற்குச் சரியான காரணம் என்பார் கூற்று வலுவிழந்து போவதால் இனி இன்னொரு காரணமான வரபலம் பற்றிப் பார்ப்போம்.

கூட்டு ஒருவரையும் வேண்டா கொற்றவனாயினும், செவ்வியோர் சேர்த்துச் செய்தல் நலம் பயக்கும் எனக்கூறிய கவந்தன் கூற்றை ஏற்று, சவரியைக் கண்டு அம்மாதரசியின் அறிவுரைப்படி சுக்கிரீவன் இருக்கும் இடம் வந்த இராமனை, முதன் முதலாகச் சுக்கிரீவன் சந்திக்கின்றான். அவனிடம் இராமன் பேசிய முதல் பேச்சு "கையறு துயரம் நின்னால் கடப்பது கருதி வந்தேம் - ஐய நின்தீரும்" என்பதாகும். இந்த அடிகள் தன் துயரைப் போக்க உதவும் மலைபோல சுக்கிரீவனை நம்பி இராமன் வந்தான் என்பதைக் குறிக்கின்றன. ஆனால் இராமனின் இந்த வேண்டுகோளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் தனது துன்பத்தை விரிவாகச் சொல்லி நின்னிடம் சரண்புகுந்தேன், காப்பது உன் கடமை என்கின்றான் சுக்கிரீவன்.

அண்ணனாகிய வாலி என்னைக் கொல்ல தொடர்ந்து வந்ததால் உயிரை விடுவதற்கு இயலாதவனாகிய நான் இப்போது உன்னை அடைக்கலமாக அடைந்தேன் என்னும் சுக்கிரீவன் பேச்சிலிருந்து, ஏதோ வாலி என்ற பெயருடைய ஒருவனால் இவனுக்குத் துன்பம் ஏற்பட்டுள்ளது என்று தெரிந்து கொள்கிறானே ஒழிய வாலி சுக்கிரீவன் பகைமையைப் பற்றி முழுமையாக அறிந்திருக்கவில்லை. இந்த நிலையில் சுக்கிரீவனுக்கு இராமன் அடைக்கலம் தந்து விடுகின்றான்.

அடைக்கலம் ஆனபிற்பாடு சுக்கிரீவன் இடத்தில் இராமன் -

விருந்து உண்ணும்போது வாலி பற்றிய வரலாற்றை முழுவதுமாக அனுமன் இராமனுக்குச் சொல்லுகின்றான். இந்த வரலாற்றில் வாலியின் வரபலம் பற்றி உள்ள செய்திகளே இங்கே நம் கவனத்திற்கு வேண்டியனவாம்.

"கிட்டுவார் பொரக் கிடைக்கின் அன்னவர்
பட்ட நல்வலம் பாகம் எய்துவான்
எட்டு மாதிரத்து இறுதி நாளும் உற்று
அட்டமூர்த்தி தாள்பணியும் ஆற்றலான்"

என்னும் செய்திகளே அவை.

போர்செய்ய வேண்டித்தன் எதிரே வருபவர் கிடைக்கப்பெற்றால் (கிடைக்கப் பெறார் என்பது குறிப்பு) அவர்களிடம் உள்ள நல்ல வலிமையில் பாதியைத்தான் அடைவான். எட்டுத் திக்கு எல்லையிலும் நாள்தோறும் சென்று அட்டமூர்த்தியாய் விளங்கும் சிவபிரானின் திருவடிகளை வணங்கும் ஆற்றலுடையவன் என்பது இந்தப் பாடலுக்கான பொருளாகும்.

வாலியின் இந்த ஆற்றலை முழுமையாக அறிந்த பின்னரே, என் வில்லில் பூட்டிய அம்பினால் அவனை அழித்து ஆட்சியோடு உன் மனைவியையும் உனக்கு இப்போதே மீட்டுத் தருவேன் என வாக்குத் தருகிறான் இராமன்.

தந்த வாக்கை நிறைவேற்றும் பொருட்டு இராமன் சுக்கிரீவனுடன் புறப்பட்டு கிட்கிந்தையைச் சேர்கிறான். கிட்கிந்தையின் ஒருபுறம் சென்று சேர்ந்தவர்கள் இனி என்ன செய்வது என்று தம்முள் கூடி நின்று பேசுகின்றனர்.

"அப்போது இராமன் (கலந்து பேசிக் கொண்டிருக்கும் போது) சுக்கிரீவனை நோக்கி, நீ வலிய அழைக்க அது கேட்டு வந்து உன்னுடன் போர் செய்யும் வாலியை உங்களுக்குத் தெரியாத ஓர் இடத்தில் நின்று கொண்டு அம்பு எய்து கொல்லத்துணிந்தேன். இந்தச் சூழ்நிலைக்கு இக்கருத்தே பொருந்துவதாகும் என்று கூறினான். பகைவனை அடக்கும் வெற்றியை விரும்புபவனாகிய சுக்கிரீவனும் இச்செயல் நல்லதாகும் என்று சிந்தித்து" .... ஆர்த்த ஓசை பிரபஞ்சம் முழுவதையும் தன்னகத்து அடக்கி மேலோங்கியது என அடுத்த பாடலில் சென்று முடியும்.

"அவ்இடத்து இராமன் நீ
அழைத்து வாலி ஆனதுஓர்
வெவ்விடத்தின் வந்து போர்
விளைக்கும் ஏல்வை வேறுநின்று
எவ்விடத் துணிந்து அமைந்தது என்
கருத்துஇது என்றனன்
தெவ்வடக்கும் வென்றி யானும்.
நன்றுஇது என்று சிந்தியா"

என்பது மேலே கண்ட பொருளுக்குரிய பாடலாகும்.

கிட்கிந்தையைச் சென்று சேர்ந்த இராமன் குழுவினர் தம்முள் கலந்து பேசியவை எவையாக இருக்கும். கம்பன் வழிச் சென்று சிந்தித்தால் இரண்டு கூறுகளே புலப்படுகின்றன. ஒன்று வாலி சரணாகதி கேட்டால் என்ன செய்வது என்பது. மற்றொன்று வாலியின் வரபலம் பற்றியது. அவன் சரணாகதி கேட்கமாட்டான், போருக்கு என அழைத்த பின்பு அதனை அவன் விரும்புவான் எனக் கனவிலும் கருதமுடியாது, ஏனெனில் அவன் மானமிகுந்தவன் என்ற முடிவிற்கே அவர்கள் வந்திருப்பர். இலக்குவன் விடையை வாலி அலட்சியப்படுத்தியதே இதனை நாம் யூகிக் இடம் தருகிறது. இதனை விடுத்தால் அடுத்து நிற்பது அவன் வரபலமே. இது பற்றியே அவர்கள் அதிக நேரம் பேசியிருக்க முடியும். வாலியின் வர பலத்தைக் கடக்க நீ ஒளிந்து நின்று அவன் மீது அன்பு செலுத்து என்று யாரும் இராமனிடம் கருத்துக் கூறியிருக்க முடியாது. எனினும் வரபலம் மட்டுமே அவர்கள் பேச்சில் முதலிடம் பெற்றிருக்க வேண்டும். வாலியை அழிப்பதே நம்முன் இருக்கும் ஒரே நோக்கம். இந்த நோக்கம் நிறைவேற வழி எதுவாயினும், அது எனக்கு மீளாப்பழி ஏற்படுத்தினும் அது பற்றிக் கவலை கொள்ள வில்லை எனக் கூறி இராமன் இந்த வழியைத் தேர்ந்தெடுத்திருக்க வேண்டும். "வேறு நின்று எவ்விட துணிந்து அமைந்தது இது என் கருத்து" என்னும் வாசகம் அதனை உறுதி செய்கிறது.

(தொடரும்)

மிக உயரத்தில் இருப்பவர்களும் தவறு சுட்டிக்காட்டப் பட்டால் எங்கேயிருந்து சுட்டிக் காட்டப் படுகின்றது என்று ஆராய்வதை விடத் திருத்திக் கொள்வது சாலச் சிறந்தது

- தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# குன்றக்குடிக் குடைவரைகளும் கல்வெட்டுகளும்

(டாக்டர். மு. நளினி, டாக்டர். இரா. கலைக்கோவன்)

## வேளாண்மை

நிலங்கள் முறையாக அளக்கப்பட்டு, விளைவுக்கேற்ப வரியளவு தீர்மானிக்கப்பட்டது. நெல், கரும்பு, மஞ்சள், கருணை, தினை, வரகு, எள் முதலிய பயிர்கள் பயிரிடப்பட்டன. நிலங்கள் துடவை, செய், வயல் என்று பொதுப் பெயர்களால் குறிப்பிடப்பட்டன. பண்படுத்தப்பட்ட நிலம் வயக்கல் எனப்பட்டது. பல நிலங்கள் தனிப்படவும் பெயர் பெற்றிருந்தன.

உமைநங்கை வயக்கல், சேத்ரபால வயக்கல், சுப்பிரமணிய வயக்கல், கணபதி வயக்கல் என்று தெய்வங்களின் பெயர்களிலும் திருவாரூர் வயக்கல், பாளூர் வயக்கல், துழயூர்வல்லி, இருள்நீக்கி வயக்கல் என்று ஊர்களின் பெயர்களிலும் கரந்தை வயக்கல், காஞ்சிரத் துடவை, இலுப்பைத் துடவல், இலந்தைச் செய், விளாந்துடவை என்று தாவரங்களின் பெயர்களிலும் கந்தன் வயக்கல், வடுகன் வயக்கல், பொன்னன் வயக்கல், ஆச்சன் வயக்கல், தேவன் வயக்கல், திருமலை வயக்கல், நங்கை வயக்கல், அவதாமணி வயக்கல் என்று மக்கள் பெயர்களிலும் குசக்குழி, தச்சன் வயக்கல் என்று தொழிலர் பெயர்களிலும் இவை அழைக்கப்பட்டன.

ஒரு நிலப்பகுதி தமிழன் வயக்கல் என்று பெயரிடப்பட்டிருந்தது. தேனாற்று நாதர் திருமுன் உள்மண்டபச் சுவரில் காணப்படும் சுந்தரபாண்டியரின் கல்வெட்டு பல நிலங்களின் பெயர்களையும் அவற்றின் உரிமையாளர்களின் பெயர்களையும் வரிசைப்படுத்துகின்றது.

இவ்விளைநிலங்கள் கிணறு, குளம், ஊருணி போன்றவற்றிலிருந்து வாய்க்கால்கள் வழி நீரைப் பெற்றன. பூங்குடிக் குளம், கூன் குளம் என நீர்நிலைகள் பெயரிடப்பட்டிருந்தாற் போல் வாய்க்கால்களுள் ஒன்று, "தேனாற்றுநாயகன் கால்" என அழைக்கப்பெற்றது. முதற் குடைவரை முகப்புத்தூண் சதுரத்தில் இருக்கும் பிலவங்க ஆண்டுக் கல்வெட்டுத் திருப்பாலைவாசல் முதலியாருக்குத் தேனாற்றுப் போக்கு நியமப்பற்றைச் சேர்ந்த திருச்சமணமழகியநல்லூர் ஊரவையார் புதிய நீரோடு கால் ஒன்றை விற்ற செய்தியைத் தருகிறது. கல்வெட்டு இதற்கான ஆவணத்தை, "மறுகால் விலைப்பிரமாணம்" என்று பெயரிடுகிறது. [53]

சாழிக் குளத்தில் தண்ணீர் ஓரிடத்திலும் விடாமல், பிள்ளைத் தொல்லியில் கீழ்த்தரையில் முறித்து, கோயாடுதுறை மட்டும் வெட்டிப் பூங்குடிக் குளத்துக்குப் பாயுமாறு உருவாக்கப்பட்டு விற்கப்பட்ட இம்மறுகால் பற்றிய கல்வெட்டு அரியதொரு வரலாற்று ஆவணமாகும். தனியர்களுக்குள் நிகழ்ந்த நில விற்பனையொன்றைச் சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியரின் பதினெட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு விளக்குகிறது.

## கோயிற் செய்திகள்

குன்றக்குடித் திருமலை வளாகத்தில் உள்ள திருக்கோயில்களைத் தேவகன்மிகள், ஸ்ரீகாரியம் செய்வார், ஸ்ரீமாகேசுவரக் கண்காணி செய்வார், ஸ்ரீருத்ரமாகேசுவரர், அகநாழிகையார், கோயில் கணக்கு எனப் பல அலுவலர்கள் நிர்வகித்து வந்தனர். பிற்காலத்தில் இப்பொறுப்புகளில் இருந்தவர்கள் தானத்தார், தலத்தார் என்ற பொதுப் பெயரால் அழைக்கப்பட்டனர்.

பொதுவாகத் திருக்கோயில்களில் காணப்படும் கல்வெட்டுகளில் பெரும்பான்மையன விளக்குக் கொடைகளைப் பேசுவனவாகவே அமையும். ஆனால், குன்றக்குடியிலுள்ள ஐம்பது கல்வெட்டுகளில் மூன்று கல்வெட்டுகளே விளக்குக் கொடைச் செய்திகளைத் தருகின்றன.

முதலாம் இராஜேந்திரரின் ஆட்சிக் காலத்தில் இராஜேந்திர சோழ அதலையூர் நாடாள்வாரின் கூலிச் சேவகர் ஸ்ரீகுருகூர் வெள்ளாளன் உலகநாதனான துட்டடக்கிப் பேரரையர் இக்கோயிலில் சந்தி விளக்கொன்று ஏற்ற ஒரு காசு கொடையளித்தார். இது கொண்டு திங்கள்தோறும் ஒரு நாழி நெய் செலவிட்டு நாள்தோறும் ஒரு சந்தியில் விளக்கேற்றக் கோயில் அகநாழிகையார் ஒப்புக் கொண்டனர்.

குன்றக்குடியைச் சேர்ந்த நாட்டான் அடவி என்பார் இக்கோயில் வளாகத்தில் சந்தி விளக்கொன்று ஏற்றத் திருவிளக்குத் துடவை நிலமென்று பெயரிடப்பட்ட நிலப்பகுதியை நீர்வார்த்துக் கொடுத்தார். தேனாற்றுநாதர் திருமுன்னிலுள்ள சிதைந்த கல்வெட்டு விளக்கெரிக்கத் தரப்பட்ட இறையிலி நிலக்கொடையைச் சுட்டுகிறது.

பல கல்வெட்டுகள் இறைக்கோயிலுக்குரிய தேவதான நிலங்களை இறையிலியாக்கியமை குறித்துப் பேசுகின்றன. விக்கிரம பாண்டியரின் ஆறாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் இரண்டு வீரசேகரன் ஆளுடையானான அதலையூர் நாடாள்வாரும் உய்யவந்தான் கண்டனான காங்கேயன் தியாக மீகாமனும் குன்றக்குடி, மணியாத்திறலில்

இருந்த தேவதான நிலங்களிலிருந்து தமக்கு வந்த வரிகளை நீக்கி, அவற்றின் வருவாய் கொண்டு இரண்டு குடைவரைகளிலுள்ள தெய்வங்களுக்குத் திருஅமுது படைக்க வகை செய்தனர் என்ற தகவலைத் தருகின்றன. இக்கல்வெட்டுகளால் விலக்கப்பட்ட வரியினங்களின் பெயர்களும் பல்வேறு நிலங்களின் பெயர்களும் அவையிருந்த இடங்களும் தெரியவருகின்றன.

முதலாம் குலோத்துங்கரின் நாற்பதாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுகள் இரண்டு ஐநூற்றுவன் உய்யவந்தனான அதலையூர் நாடாள்வாரும் நாட்டான் வீரசேகரனான விருதராஜ பயங்கர அதலையூர் நாடாள்வாரும் தமக்கு ஜீவிதமான ஊர்களில் இருந்த தேவதான நிலங்களை இறையிலியாக்கித் திருக்குன்றக்குடித் திருமலையுடைய மகாதேவருக்கு வழங்கியதைச் சொல்கின்றன. அதே மன்னரின் நாற்பத்தொன்பதாம் ஆட்சியாண்டில் திருக்குன்றக்குடித் திருமலையுடைய நாயனார் திருப்பலிச் சடங்கிற்கு எழுந்தருளும்போது அமுதுண்டு எழுந்தருளுவதற்கு வாய்ப்பாக நாட்டான் வீரசேகரனான அதலையூர் நாடாள்வார் கீழ்க்கண்ணமங்கலத்திலிருந்து தாம் பெற்ற வரியினங்களை நீர்வார்த்துக் கொடையளித்தார்.

மேற்கண்ணமங்கலத்திலிருந்த நிலங்கள் அதலையூர் நாடாள்வார்களான வெள்ளானை விடங்கன் அவைப் பஞ்சானனுக்கும் மும்முடிசோழன் வீரசேகரனுக்கும் சரிபாதி உரிமையுடையனவாக இருந்தன. சடையவர்மர் ஸ்ரீவல்லபரின் நான்காம் ஆட்சியாண்டில் இவ்விரு பெருமக்களும் தத்தமக்கு உரிமையுடைய நிலப்பகுதிகளின் வரியினங்களைத் திருக்குன்றக்குடித் திருமலை மூலஸ்தானம் உடைய நாயனாருக்குக் கொடையளித்துக் கல்வெட்டித் தந்தனர்.

சில கல்வெட்டுகள், வரி தவிர்த்துத் தனியார்க்கு நிலங்கள் விற்கப்பட்டதையும் அப்படித் தவிர்க்கப்பட்ட வரிகளுக்கு மாற்றாக அந்நிலங்களை வாங்கியவர்கள், விளைவுக்கேற்ப குறிப்பிட்ட அளவு விளைபொருட்களையோ அல்லது தொகையையோ தேனாற்றுநாயகர் கோயிலுக்குத் தரவேண்டுமென்று விதி செய்து ஒப்பந்தங்கள் அமைக்கப்பட்டதையும் தெரிவிக்கின்றன.

தேனாற்றுநாயகருக்கு வழிபாடு, படையல்களுக்காய்ச் சில பெருமக்கள் நிலங்களை விலைக்கு வாங்கி இறையிலியாகக் கோயிலுக்குக் கொடையளித்துள்ளனர். நியமத்தைச் சேர்ந்த சூரியன் கண்டனான பஞ்சவராயன், சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியரின் மூன்றாம் ஆட்சியாண்டில் விலைக்கு வாங்கிக் கொடையளித்த

நிலப்பகுதியின் வரி மதிப்பீடு கண்டன் உதயஞ்செய்தானான காங்கேயரால் குறைக்கப்பட்டது.

முதலாம் இராஜராஜரின் பெருந்தரத்து அலுவலர் அளித்த நிலக்கொடை குன்றக்குடி இறைவனின் உச்சம்போது திருவமுதிற்காய் அமைந்தது. சோணாடு கொண்டருளிய சுந்தரபாண்டியரின் பதினெட்டாம் ஆட்சியாண்டில் பல பெருமக்கள் ஒன்றிணைந்து தேனாற்று நாயகருக்குக் காரண்கிழமையாக பதினேழு மாநிலத்தை நீர் வார்த்துக் கொடுத்தனர். படையல்களுக்கும் வழிபாட்டிற்கும் கொடையளித்தாற் போலவே இக்கோயில் இறைவனுக்கு விழா எடுப்பதற்கும் கொடையளிக்கப்பட்டது.

குன்றக்குடி ஊரவையால் திருமலையுடைய மகாதேவருக்கு விழா எடுப்பதற்காகத் தரப்பட்ட இந்நிலக்கொடை விழாப்புறமாகப் பதியப்பட்டது. நாராயணன் கேசவனான தேவன் தேனாற்றுவேளார் குன்றக்குடித் திருமலையுடைய மகாதேவருக்கு ஆயனத்துக்குக் கலசமாடியருள உமைநங்கை வயக்கலை நீர்வார்த்துக் கொடுத்தார். தேனாற்று நாயருக்குரிய திருநந்தவனத்து அவ்ச்சுனையின் கீழ்க்கரையும் தென்கரையும் அமைக்கக் குன்றக்குடிக் கட்டி அரசன் நிலக்கொடை தந்ததை ஸ்ரீவல்லபரின் எட்டாம் ஆட்சியாண்டுக் கல்வெட்டால் அறிகிறோம்.

நடுக் குடைவரையில் இன்றும் காணப்படும் சேத்ரபாலர் திருமேனி பற்றி நேரடியாகப் பேசும் கல்வெட்டுகள் இரண்டு இங்குள்ளன. சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியரின் எட்டாம் ஆட்சியாண்டு வைகாசித் திங்களில் வெட்டப்பட்டுள்ள இவ்விரண்டனுள் ஒன்று, தேனாற்று நாயகர் கோயிலில் சேத்ரபாலர் திருமேனியை எழுந்தருளுவித்தவராகச் சாக்கலூர் பொற்பதி பிரியனான செழிய சிங்கபன்மனை அறிமுகப்படுத்துவதுடன், சேத்ரபாலரின் நித்த நிவந்தங்களுக்கான செலவினங்களுக்காகச் சில குறிப்பிட்ட நிலங்களின் இறையை நியமத்துக் கண்டன் ஆளுடையானான கல்வாயில் நாடாள்வார் நீர் வார்த்துத் தந்ததையும் கூறுகிறது.

இக்கல்வெட்டின் கீழ் இதன் தொடர்ச்சி போலக் காணப்படும் மற்றொரு கல்வெட்டு சேத்ரபாலருக்கு அளிக்கப்பட்ட தேவதான நிலம் பற்றித் தெரிவிக்கிறது. மற்றொரு கல்வெட்டும் இது போலவே சேத்ரபாலப் பிள்ளையாரின் நித்த நிவந்தங்களுக்காகச் சில குறிப்பிட்ட நிலங்களின் வரிகளை அதலையூர் நாடாள்வார் உய்யவந்தான் வென்று முடிசூடினான் நீர்வார்த்துத் தந்த தகவலைத் தருகிறது.

(தொடரும்)

# “அருளாலய நாட்டுடைமை”

(தமிழாகரர். தெ. முருகசாமி, புதுச்சேரி -9)

முத்தமிழ் அறிஞர் முதல்வர் கலைஞர்
இத்தமிழ் நாட்டை இனிதாய் ஆளும்
அய்ந்தாம் முறையின் ஆட்சி தன்னில்
அய்ந்து கண்டமும் அழகாய்ப் புகழ
அடுக்கடுக் காக ஆற்றும் செயல்கள்
மிடுக்குடன் நாளும் மேலோங் குவதால்
அரசியல் உணர்ந்த அத்தனை பேரும்
உரசல் இன்றி உயர்வாய்ப் போற்ற
உயர்தமிழ் ஆட்சி ஓங்கிடும் வேளை,
அயர்விலா உழைப்பை அருந்தமிழ் மொழிக்காய்த்
தந்து வாழ்ந்த தமிழறி ஞர்தம்
சிந்தனை நூல்களைச் செந்தமிழ் அரசு
மதித்திடும் விதமாய் மக்கள் பதிப்பென
விதித்திடும் வகையில் இந்நாட் டுடைமை
என்றே ஆக்கி ஏற்றங் காட்டி
நன்றே செய்த நயப்புறு செயலை
யாரும் மறவார்! யாண்டுபல வாயினும்
பாரும் மறவாப் பான்மைய தாகும்!
எனப்புகழ் வேளையில் எம்இறை அடிகள்
எனப்படும் குன்றக் குடியின் கோமான்
தமிழ்மா முனிவர்! தவத்திரு தந்தை!
இமிழ்கடல் போல இருந்தநாள் எல்லாம்
முத்தமிழ் முரசாய் முழங்கிய முழக்கம்
முத்திரை பதித்த முதிர்பதி னாறு
தொகுதி நூல்களாய்த் தொகுத்தவை தமக்கும்
விகுதி யில்லா வகுத்தல் கணக்காய்,
சட்ட மன்றச் சரித்திர நிகழ்வில்
சுட்டத் தகும்நல் வரவு செலவு
நிதிநிலை அறிக்கை நின்புகழ் கொள்ள
நிதியை ஒதுக்கிய கருணா நிதியாம்
முதல்வர் தமக்கு முறையாய் நன்றி
முதலில் சொல்ல முனைந்த போது,

நூலின் மூலவர் நெஞ்சிடங் கொண்டார்!
பாலின் வெண்மைபோல் பார்த்தேன் அவரை!
வாயில் வாழ்த்தும் வருவ தற்குள்
தாயின் மடியில் தூங்கும் சேய்போல்
கண்வளர்ந் திட்ட கனவில் வந்த
மண்புகழ் தவத்திரு மகாசந்நி தானத்
திருவடி தொட்டேன்! திருநீ றிட்டார்!
குருவடி வாகிக் குவலயம் போற்றும்
குன்றக் குடிக்குக் கூடிய பெருமை
இன்று வந்ததை எடுத்துச் சொன்னேன்!
எப்படி என்றார்? "கண்ணகி சிலையைச்
செப்பிய படியே சென்னையில் மீண்டும்
வைத்த முத்தமிழ் வள்ளல் என்னும்
வைத்தமா நிதியாம் வளர்தமிழ்க் கருணா
நிதியெனும் முதல்வர் நித்தம் நித்தம்
நிதான மாக ஆளும் அவர்தாம்
முத்தமிழ் அறிந்த முனைவர் என்பதை
இத்தரை யறியும் இயல்பிற் கேற்ப
புத்தக விழாவில் சொந்தப் பணமாய்
மொத்தமொரு கோடி முழுசாய்த் தந்து
"பொற்கிழி தருவீர்! புத்தகத் தார்க்கென"
அற்புத அறக்கட்ட ளையை அமைத்த
ஒப்பிலா ஒருவர்! ஒண்டமிழ் அறிஞரின்
தப்பிலா உணர்வைத் தகுமவர் நூல்களால்
உணர்ந்தவர் என்பதன் உண்மைக் காகப்
பணந்தனை, நிதிநிலை அறிக்கையில் பலவாய்
ஒதுக்கி ஒண்டமிழ் நூல்களை யெல்லாம்
விதிப்படி தமிழ்நாட் டுடைமை யாக
ஆக்கிய வற்றுள் அடிகள் தம்மை
நோக்கிய விதமாய் அவர்தம் நூலையும்
ஆக்கிய அற்புதத் தாலே இன்று
பாக்கியம் பெற்றது பழந்தமிழ் குன்றாக்
குடி"யென நானும் குதூகல மாக
முடிவாய்ச் சொன்னேன்! முத்தமிழ் அடிகள்
மெதுவாய்ப் பார்த்து மெல்ல நகைத்து

"புதுவர வாயினும் பழந்தமிழ் நட்பை
உறவுகோல் நட்டே உயிர்ப்பித் திட்டத்
திறவுகோல் இதுவெனத் திறமாய் அறியச்
செய்தது" என்று செந்தமிழ் அடிகள்
செய்தியாய்ச் சொல்ல, செப்பினேன் ஒன்றை;
"தக்கார் தகவிலர் என்ப தவரவர்
எச்சத் தாலே காணப் படுமென
அய்யன் வள்ளுவர் அருமையாய்ச் சொன்ன
அய்யமில் மொழிக்கு, அடையாள மாக
அடிகள் நூல்கள் அமைவ தாலே
[1] படியில் நூல்கள் பார்புகழ் நாட்டு,
உடைமை என்பதால், உணர்த்திய நாட்டு,
உடைமை, குறளினும் உயர்ந்ததா!" என்று
வேண்டி நின்றேன்! அவ்வேளை அடிகள்
நீண்ட தாடியை நீவிய விதமாய்
"அற்புதக் கலைஞர் அருமை முதல்வராய்
நற்றமிழ் நாட்டில் நாலாம் முறையாய்
மிடுக்குடன் ஆண்ட மேனாள் தன்னில்
எடுத்தரு ளாலய எழிலெலா மிருக்க
நவில்தொறும் நூல்நயம் என்றதன் படியே
பயில்தொறும் நம்மிடம் பழகிய பண்பை
வான்புகுந் திட்ட வனப்பிலும் நம்பால்
"நான்மிகு அன்பினன்" என்பதைக் காட்டவே
எம்நூல் நம்நாட் டுடைமை ஆக்கினார்!
செம்மொழிச் செம்மல் கலைஞர்!" என்றதும்
தும்மல் வந்ததாய்த் துள்ளி எழுந்தேன்!
அம்மான் அருளா லயத்தின் முன்னர்!
"சித்திரைத் திங்கள் சித்திரை நாளில்
முத்திரை பதித்து முத்தியடைந் திட்ட
மூல வருக்கு முதல்வர் செய்த
சாலநாட் டுடைமை படையலாம்" என்றே
அருளா லயத்தை அன்பாய்ச் சுற்ற
பொருளாய்ப் பொலிந்தது பொன்மன நினைப்பே!

---

* படியில் நூல்கள் - ஒப்புமை சொல்லாமுடியாத நூல்கள்

* நான்மிகு அன்பினன் - கலைஞராகிய நான்

# தீக்குறளை

(ஆ. சிவலிங்கனார், மயிலம் பொம்மபுர ஆதீனப்புலவர்)

*வையத்து வாழ்வீர்காள்! நாமும்நம் பாவைக்குச்*
*செய்யும் கிரிசைகள் கேளீரோ; பாற்கடலுள்*
*பையத் துயின்ற பரமன் அடிபாடி*
*நெய்யுண்ணோம் பாலுண்ணோம்; நாட்காலே நீராடி*
*மையிட் டெழுதோம்; மலரிட்டு நாம் முடியோம்!*
*செய்யா தனசெய்யோம்; தீக்குறளை சென்றோதோம்;*
*ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி*
*உய்யுமா றெண்ணி உகந்ததேலோ ரெம்பாவாய்.*

ஆண்டாள் அருளிய இத்திருப்பாட்டில் "தீக்குறளை சென்றோதோம்" என்பதற்குத் "தீய புறங்கூறல் எனும் குற்றத்தைப் பலரிடம் போய்ச் சொல்லோம்" என்பது பொருள். சிலர், "தீய திருக்குறளைச் சென்று ஓதோம்" எனப் பொருள் கொள்வர். அப்படிப் பொருள் கொள்வதால் ஆண்டாளுக்கு வரும் இழிவைக் கருதவில்லை. "குறளை" என்பது "புறங்கூறல்" என்னும் பொருளது. புறங்கூறாமை எனும் தலைப்பில் வள்ளுவர் பத்துக் குறளமைத்துள்ளார்.

திருக்குறளை ஓதமாட்டோம் என்றால், "திருக்குறள் கூறும் அறவழி நடக்க மாட்டோம்" என்பது பொருளாகும். திருக்குறள் வழி நடவாத ஆண்டாள், திருமால் அடியவராதற்குத் தகுதியற்றவர் ஆகின்றார். திருக்குறள் கூறும் ஒழுக்கத்தைக் கடைப்பிடிக்க மாட்டாதவராகின்றார். திருமாலாகிய கணவனைத் தவிரப் பிறரை நினையாத கற்புடையவர் என்பதற்குத் தகுதியற்றவராகின்றார். அப்படியானால் ஆண்டாள், வைணவரால் போற்றப்படும் தகுதியற்றவராவார் என்பது தெரியவரும். இதை ஒப்புவரோ உண்மை வைணவர்? ஒப்புவராயின், அவர்கள் எப்படி வேண்டுமானாலும் "குறளை" என்பதற்குப் பொருள் சொல்லிக் கொள்ளட்டும்.

இனிக் "குறளை" என்பது, புறங்கூறல் என்னும் பொருள்படும்போது ஐகாரவீற்றுப் பெயர்ச்சொல். "திருக்குறள்" என்னும் பொருள்படும்போது, இரண்டன் உருபு ஏற்ற பெயர்ச்சொல். "குறளை சென்றோதோம்" என்னும்போது, "குறளைச் சென்றோதோம்" எனச் சகர ஒற்று மிகவேண்டும். "குறளை" என்பது "புறங்கூறல்" எனும்

பொருள்படும்போது "குறளை சென்றோதோம்" எனச் சகரவொற்று இன்றிவரும். இவ்விலக்கணக் குறிப்பையும் மனதிற் கொள்ள வேண்டும். இலக்கணவுணர்வில்லார் செய்யுட் சொற்களுக்குப் பொருள் கூறுவதில் பிழைபடுவர். சகரவொற்று வருதலும் வாராமையுமாகிய விகற்ப நிலையைக் கொள்ளின் முன்னைய குறை ஆண்டாளம்மைக்கு வரும்.

"செய்யாதன செய்யோம்" என்றதற்கேற்பத் "தீக்குறளை சென்றோதோம்" என்பது கூறப்பட்டது.

**குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில் உண்டியலுக்குள் தங்கத்தால் செய்யப்பட்ட வேலுடன் இணைக்கப்பட்டிருந்த கடிதம்**

குன்றைவாழ் குமரக்கடவுள் துணை



**ஆ. ராமசாமி**

அறிவித்தி கிராமம், கூகுடி (போஸ்ட்), மங்களக்குடி வழி

ராமநாதபுரம் மாவட்டம்

திரு. குன்றக்குடி குமரக்கடவுள் துணை

குன்றக்குடி தேவஸ்தான நிர்வாக தலைவர் அவர்களுக்கு

எனது வேண்டுதல் நிறைவேற்ற 28.9.2006 அன்று செலுத்தும் (துங்க வேல்).

முருகா எனது வாழ்வில் பல சோதனைகள் நடந்தது. எனது திருமணம் எனக்கு 31 வயதில் நடந்தது. பலவருடம் கழித்து குழந்தை பிறந்தது. பெண் குழந்தை. பிறக்கும்போதே இறந்துவிட்டது. அதனால் எனது மனைவியும், நானும் ஆறாது துயரப்பட்டோம். என்னை ஆட்கொண்ட முருகனை காண குன்றக்குடி வந்து கண்ணீர் ஓட முருகனை வேண்டினேன். அந்த கருணைக் கடவுள் முருகன் அருளால் இரண்டாவது மகன் பிறந்தான். அவனுக்கு முருகன் கைவேல் நினைவாகவும் எனது வேண்டுதல் வெற்றி பெற்றதால் எனது அருமை செல்வனுக்கு வெற்றிவேல் என்று பெயர் சூட்டினேன். எனது வேண்டுதல் எனது மனைவியின் திருமாங்கல்யத்தை (தாலியை) அழித்து தங்க வேல் செய்து எனது வேண்டுதல் கடிதத்துடன் சேர்த்து உண்டியலில் போட்டு விட்டேன். இந்த வேலை மக்கள் கண்ணுக்கு காட்சிப் பொருளாக வைத்து முருகன் பெருமையும் கருணையும் விளங்கிட மக்கள் பார்வைக்கு வைத்திட வேண்டுகிறேன்.

இவண்

**ஆ. ராமசாமி (மகன் வெற்றிவேல்)**

/ உண்மை நகல் /

**- ஆசிரியர்**

## "செந்தமிழ் வாரிதி"
## முனைவர் **இரா. செல்வக்கணபதி** அவர்களுக்குக் "கலைமாமணி" விருது



சிறந்த சமயச் சொற்பொழிவாளருக்கான இவ்வாண்டுக்கான "கலைமாமணி" விருது, பேராசிரியர் முனைவர். **இரா.செல்வக்கணபதி** அவர்களுக்குத் தமிழ்நாடு அரசால் அறிவிக்கப்பட்டுள்ளது.

முனைவர் திரு. இரா.செல்வக்கணபதி அவர்கள் மூத்த சைவத் தமிழ் அறிஞர். தருமை ஞானப்பண்ணையில் உருவானவர். இந்திய நாடெங்கும், உலக நாடுகளிலும் மூவாயிரத்திற்கும் மேற்பட்ட சைவசமயச் சொற்பொழிவுகளை நிகழ்த்தியவர். உலகெங்கும் உள்ள சைவத் திருமடங்களாலும், சைவ சமய அமைப்புகளாலும் பதினான்கு கௌரவப் பட்டங்கள் வழங்கப் பெற்றவர். பன்னூல் ஆசிரியர், கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவராகவும், முதல்வராகவும் சிறக்கப் பணியாற்றியவர்.

சென்னை - 90, தெய்வச் சேக்கிழார் மனிதவள மேம்பாட்டு அறக்கட்டளையின் நிறுவனத் தலைவர். அறக்கட்டளை வாயிலாகப் பெரியபுராண நாயன்மார் அறுபத்து மூவர் வரலாறுகளையும், 52 மணி நேரம் ஒலிக்கும் ஒலிக் குறுந்தகடுகளாக வெளியிட்டவர். இவர் வெளியிட்ட திருமந்திரப் பேருரை உலக நாடுகளில் பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது. "**சைவமும் தமிழும்**" நூல் அறக்கட்டளை வாயிலாக வெளிவந்தது.

தற்போது, உலகளாவிய அளவில் தயாரிக்கப்பட்டு வரும் சைவ-சமயக் கலைக்களஞ்சியம் (ஒன்பது தொகுதிகள் - 6000 பக்கங்கள், 10,008 பதிவுகள்) தொகுப்பின் தலைமைப் பதிப்பாசிரியர். 25 மூத்த பல்துறை அறிஞர்களை ஆலோசகர்களாகவும், 175 சைவத் தமிழ் அறிஞர்களை ஆசிரியர்களாகவும் கொண்டு சைவசமயக் கலைக்களஞ்சியம் தமிழ்-ஆங்கிலம் மற்றும் இ-புக் என மூன்று கூறுகளாக அறக்கட்டளை வாயிலாகத் தயாராகி வருகிறது.

தமிழ்நாடு அரசின் இந்து சமய அறநிலைய ஆட்சித்துறையின் உயர்மட்டக் குழுக்களில் முனைவர். இரா.செல்வக்கணபதி அங்கம் வகித்து வருகிறார்.

# குன்றக்குடி விசாக விழா

## மேதகு நீதியரசர் **எம். சொக்கலிங்கம்** அவர்களுக்கு **"இறைநீதி அண்ணல்"** பட்டம் தந்து பாராட்டு



ஆண்டுதோறும் வைகாசித் திங்கள் விசாக நட்சத்திர நாளன்று குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கு விசாகத் திருவிழா சிறப்பாக நடைபெற்று வருகிறது. வழக்கம் போல இந்த ஆண்டும் நடைபெற்றது.

இந்த ஆண்டு விசாக நாளாகிய 30.4.2007 புதன்கிழமை அன்று காலை 7.30 மணி அளவில் திருக்கோயிலிலிருந்து அருள்தரு சண்முகநாதப் பெருமான் வெட்டிவேர் அலங்காரத்துடன் வெண்பட்டுக் குடை நிழற்ற கீழரதவீதி வழியாக ஆதீனத் திருமடத்துக்கு மேளதாளங்களுடன் எருந்தருளினார். திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் ஆதீனத் திருமடத்தின் முகப்பில் நின்று வரவேற்றார்கள். பெருமான் அருள்தரு காளத்திநாதர் சந்நிதிக்குச் சென்று கொலுமண்டபத்துக்கு எழுந்தருளினார். கொலுமண்டபத்தில் வேதங்கள் முழங்க ஒரு சுற்றும், திருமுறைகள் முழங்க ஒரு சுற்றும், நாதசுர மேளங்கள் முழங்க ஒரு சுற்றுமாக வலம் வந்து கொலுமண்டப பீடத்தில் வீற்றிருந்தருளினார். பின் தூப தீப வழிபாடு நிகழ்ந்தது. அதன்பின் திருமடத்துக்கு எழுந்தருளிய செந்தமிழ்க்கடவுளாம் திருமுருகனை

வரவேற்று தீந்தமிழ்க் கவிஞர்கள் ஆறுபேர் வரவேற்புத் தமிழ்ப்பாமாலை சூட்டினர்.

பகல் 11.30 மணியளவில் அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்குச் சிறப்புத் திருமுழுக்காட்டு நடைபெற்று, பச்சை சாத்துப்படி செய்து சிறப்பு வழிபாடு நிகழ்ந்தது. அன்பர்கள் அத்திருக்காட்சி கண்டு உய்தி பெற்றனர்.

காலையில் பெருமான் திருமடத்துக்கு எழுந்தருளிய போதும் மாலையில் விழா மேடையிலும் இரவு திருவீதி உலாவின் போதும் வலங்கைமான் நாதசுர வித்வான் திரு. எஸ்.ஏ.எஸ். சந்திரசேகரன் குழுவினரும் குன்றக்குடி ஆதீன நாதசுர வித்வான் திரு. சோமு. கந்தசாமி குழுவினரும் நாதசுர இசை மழை பொழிந்து மகிழ்வித்தனர்.

மாலை 6.30 மணியளவில் சென்னை உயர்நீதிமன்றம் மேதகு நீதியரசர் திருமிகு. எம். சொக்கலிங்கம் அவர்களுக்குப் பாராட்டுவிழா நிகழ்ந்தது. ஆதீன ஓதுவார் திரு. ஏ.எம். சம்பந்தமூர்த்தி இறைவணக்கம் பாடினார். பேராசிரியர் சொ. சேதுபதி வரவேற்புரையாற்றினார். திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் மேதகு நீதியரசர் திருமிகு. எம்.சொக்கலிங்கம் அவர்களுக்கு "இறைநீதி அண்ணல்" என்னும் பட்டம் வழங்கி, பொற்பதக்கமும் பொன்னாடையும் அணிவித்து, பட்டயமும் அளித்துச் சிறப்பித்தார்கள். மீனாட்சிமைந்தன் திரு.வி.என்.சிதம்பரம் அவர்கள், இலக்கியச் சிந்தனை திருமிகு. ப. இலட்சுமணன் அவர்கள், கணக்காயர் திருமிகு.முனைவர். தமிழண்ணல் அவர்கள், பேராசிரியர். திருமிகு. குழந்தைராசு அவர்கள், தமிழ்ப்பல்கலைக்கழகத் துணைவேந்தர் திருமிகு.முனைவர் சி.சுப்பிரமணியம் அவர்கள், தமிழ்நாடு அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு. கே.ஆர்.பெரியகருப்பன் அவர்கள் ஆகியோர் பட்டம் பெற்ற நீதியரசர் அவர்களைப் பாராட்டிப் பேசினர். மேதகு நீதியரசர் திருமிகு. எம்.சொக்கலிங்கம் அவர்கள் ஏற்புரையாற்றினார். திருமிகு. சு. செல்வராசு அவர்கள் நன்றி நவில, வாழ்த்துப் பாடலுடன் நிகழ்ச்சி இனிதே நிறைவெய்தியது.

இரவு 11 மணி அளவில் திருமடத்திலிருந்து அருள்தரு சண்முகநாதப் பெருமான் வெள்ளி ரதத்தில் எழுந்தருளித் திருக்கோயில் சேர்க்கையடைந்தார்.



# கல்வெட்டு நிறுவனத்தின் சுருக்கமான வரலாறு

டாக்டர். **இரா. கலைக்கோவன்**
இயக்குநர்,
டாக்டர் இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மையம்
சி 87, பத்தாம் குறுக்கு மேற்கு விரிவாக்கம்
தில்லைநகர், திருச்சிராப்பள்ளி - 620 018
தொலைபேசி எண்கள் : 0431 - 2766581 (மருத்துவமனை)
0431 - 2740302 (இல்லம்)

இந்தியாவிலுள்ள கல்வெட்டுகளைப் படியெடுக்கும் பணி 1887ல் ஆங்கிலேய அரசால் தொடங்கப்பெற்றது. இதற்கான கல்வெட்டு நிறுவனம் தமிழ்நாட்டிலுள்ள உதகமண்டலத்தில் அமைந்தது. விடுதலைக்குப் பிறகு, அப்போதமைந்த தமிழ்நாட்டரசின் கவனக்குறைவால் இந்நிறுவனம் மைசூருக்குக் குடிபெயர்ந்தது. தென்னிந்தியாவில் படியெடுக்கப்படும் கல்வெட்டுகளை இந்நிறுவனம், "கல்வெட்டறிக்கை" என்ற பெயரில் (Annual Report On Indian Epigraphy) ஆண்டுதோறும் வெளியிட்டு வந்தது. இவ்வறிக்கையில், அந்தந்த ஆண்டுகளில் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளின் எண்ணிக்கை, அவை இருக்கும் இடம், அக்கல்வெட்டுகளின் மிகச் சுருக்கமான செய்தி என்பன வெளியிடப்பட்டன.

முழுமையான கல்வெட்டுப் பாடங்களைப் பதிப்பிக்கத் தென்னிந்தியக் கல்வெட்டுகள் (South Indian Inscriptions) எனும் தொகுதிகளை இந்நிறுவனம் வெளியிடத் தொடங்கியது. 1887ல் இருந்து 1909 வரையில் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளின் பாடங்கள் மட்டுமே (முழுமையான கல்வெட்டுகள்) இந்நிறுவனத்தால் இதுகாறும் 26 தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. 1909ல் இருந்து 2005வரையில் ஆண்டுதோறும் படியெடுக்கப்பட்ட பல்லாயிரக்கணக்கான கல்வெட்டுகளின் பாடங்கள், ஏறத்தாழ 97 ஆண்டுக் காலப் படியெடுப்புகள் இன்றுவரை தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதிகளாக வெளிவரவில்லை.

தமிழ்நாடு முழுவதிலுமாய்ப் பல்வேறு கோயில்களிலிருந்து படியெடுக்கப்பட்ட இந்தக் கல்வெட்டுப் பாடங்கள், பதிப்பிக்கப்படாது 1909ல் இருந்து மைசூர்க் கல்வெட்டு நிறுவனத்தில் தேங்கிக் கிடக்கின்றன. இவற்றை வெளியிடுவதற்கான முயற்சிகளைத் தமிழ்நாடு அரசு உடன்

மேற்கொள்ளவேண்டும் என்பது வரலாற்றாய்வாளர்களின் பணிவான வேண்டுகோள், இந்தியாவிலேயே தமிழ்நாட்டுக் கல்வெட்டுகளின் எண்ணிக்கைதான் பன்மடங்கு அதிகம்.

இந்திய அரசின் ஆளுகையின் கீழ் மைசூரில் இயங்கும் இக்கல்வெட்டு நிறுவனத்தின் கிளை ஒன்று சென்னையில் தலைமைச் செயலக வளாகத்தில் அமைந்துள்ளது. இதுவரையிலும் படியெடுக்கப்படாத தமிழ்நாட்டுக் கல்வெட்டுகளைப் படியெடுக்கும் பணியில் இக்கிளை நிறுவனத்தில் இருவர் மட்டுமே பணியாற்றுகின்றனர். மைசூர் நிறுவனத்திலும் தமிழ்க் கல்வெட்டுகள் பதிப்புப் பணியில் இருவர் மட்டுமே உள்ளனர். இந்நால்வரும் அரிதின் முயன்றாலும் புதிய படியெடுப்புகளை நிகழ்த்துவதும் ஏற்கனவே படியெடுத்துப் பதிப்பிக்கப்படாமல் இருக்கும் 97 ஆண்டுக் காலக் கல்வெட்டுத் தேக்கங்களை வெளிக்கொணர்தலும் இயலாத செயலாகும்.

பொருளாதாரச் சூழல்கள் காரணமாகவும் தேவையான அளவிற்குக் கல்வெட்டாய்வாளர்கள் இல்லாமையாலும் மொழி, இனக் காரணங்களாலும் இந்நிறுவனத்தின் தமிழ்க் கல்வெட்டுகள் சார்ந்த பணிகள் பெரிதும் முடக்கி வைக்கப்பட்டிருப்பதாக அறியமுடிகிறது. இதனால், தமிழ்நாட்டு வரலாற்றைக் காப்பாற்றத் தமிழ்நாடு அரசு பின்வரும் தீர்வுகளைக் காண்பது தமிழினத்தைச் சரியான தளங்களில் அடையாளப்படுத்த உதவுவதுடன் தமிழ்நாட்டு வரலாற்றை முழுமையான அளவில் உருவாக்கவும் துணைநிற்கும்.

## தீர்வுகள்

1. சென்னையிலுள்ள நடுவணரசுக் கல்வெட்டுத்துறை நிறுவனத்தின் தகுதியை மேம்படுத்துதல்.

2. நடுவணரசின் மைசூர்க் கல்வெட்டு நிறுவனத்தில் 97 ஆண்டுகளாக வெளியிடப்படாமல் வைக்கப்பட்டிருக்கும் பல்லாயிரக்கணக்கான தமிழ்க் கல்வெட்டுப் பாடங்களின் பதிவுகளைச் சென்னை நிறுவனத்துக்கு உடனடியாக மாற்றிப் பெறுதல்.

3. இக்கல்வெட்டுப் பாடங்களைப் படியெடுக்கப்பட்ட ஆண்டு வரிசைப்படிப் பதிப்பிக்கும் பணியை உடனடியாகத் தொடங்குதல் நன்று. இதற்கான நிதி ஒதுக்கீட்டைச் செம்மொழித் திட்டத்தின் கீழ் நடுவணரசோ அல்லது தமிழ்நாடு அரசோ செய்தருளல் வேண்டும்.

4. 97 ஆண்டுக் காலப் பதிவுகள் பதினைந்து ஆண்டுகளுக் குள்ளேனும் தொகுதிகளாகப் பதிக்கப்பெறுமாறு திட்டமிடல்,

அதனால் விளையும் பணிச்சுமைக்கேற்ப புதிய கல்வெட்டாய்வாளர் பதவிகளைத் தேவைக்கேற்ப உருவாக்கி, தகுதிசான்ற கல்வெட்டாய்வாளர்களைப் பணியமர்த்தல்.

5. தமிழ்நாடு அரசின் தொல்லியல் துறையில் பணியாற்றும் தகுதிசான்ற கல்வெட்டாய்வாளர்களையும் இப்பதிப்புப் பணிக்குத் திருப்பிவிட்டுக் காலத்தே இக்கல்வெட்டுப் பாடங்கள் அச்சிடப்பெற்றுத் தொகுதிகளாக வெளிவரும்படிச் செய்தல்.

6. தமிழ்நாட்டுக் கோயில்கள் வரலாற்றுக் களங்களாக இருப்பதாலும் அங்குள்ள கல்வெட்டுகள், சிற்பங்கள் இவை கோயில் திருப்பணிகளின் போது பெருமளவு சிதைக்கப்படுவதாலும் இனிவரும் காலத்தில், கோயில் திருப்பணிகள் தமிழ்நாடு அரசின் தொல்பொருள் துறை வழிகாட்டலில் மட்டுமே மேற்கொள்ளப்படல்வேண்டுமென்று அரசாணை பிறப்பித்து அதை இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை அலுவலர்கள் முறையாக நடைமுறைப்படுத்த அறிவுறுத்தல்.

---

# இனிமை எது?

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

நாவிற்கே இனிமை எது? கரும்பு! உள்ள
நாசிக்கே இனிமை எது ? முல்லை! தீட்டும்
பாவிற்கே இனிமை எது? உணர்ச்சி! நல்ல
பண்பிற்கே இனிமை எது? அடக்கம்! காணும்
வாவிக்கே இனிமை எது? அல்லி! நீண்ட
வானுக்கே இனிமை எது? நிலவு! பூத்த
பூவிற்கே இனிமை எது? வாசம்! நம்தாய்ப்
பூந்தமிழ்க்கே இனிமை எது? "இனிமை" தானே!

இல்லறத்தின் இனிமை எது? மழலை! செந்தேன்
இசைப்பாட்டின் இனிமை எது? மயக்கம்! சொக்கும்
நல்லுரையின் இனிமை எது? ஈர்ப்பு! தூய
நட்புறவின் இனிமை எது? உதவி! வண்மை
நெல்வயலின் இனிமை எது? விளைச்சல்! வாழ்ந்த
நெறிவாழ்வின் இனிமை எது? மாட்சி! கற்கும்
நல்லறநூல் இனிமை எது? ஒழுக்கம்! அந்த
நன்னூலுள் இனிமை எது? "குறள்நூல்" தானே!

"நாகரிகம்" என்றால் நல்ல நடத்தை என்று பொருள். "பண்பெனப்படுவது பாடறிந்து ஒழுகுதல்" என்று கலித்தொகை கூறும். அதாவது மக்கள் தொகுதியுடன் ஒத்தறிந்து ஒழுகுதலாகும். இங்ஙனம் ஒத்தறிந்து ஒழுகும் பொழுதுதான் சமுதாயம் உருவாகும்; உருவாகியும் வருகிறது. எவ்வளவுதான் தனி மனிதன் சிறந்தவன் ஆனாலும்- அவனுடைய சிறப்புக்கே சமுதாய அமைப்புதான் காரணம். இரண்டு பேருடைய அறிவார்ந்த விவாதத்தில் பிறக்கும் அறிவுக்கும் சக்திக்கும் நிறைய ஆற்றல் உண்டு!

- அருள்நெறித்தந்தை

# சிந்தனை வட்டம்

வைகாசி – மே 2007 மக்கள் சிந்தனையில் தங்கள் தலையங்கம் படித்தேன். நெக்குருகிப் போய்விட்டேன். சோகக்கனத்தில் மனம் சற்றே திகைத்தது. ஒரு கணம் அப்படியே கண்களை மூடிவிட்டேன். மனசுக்குள் நீங்கள். சோகம்படிந்த உங்கள் கம்பீர முகம் தெரிந்தது. இதற்குப் பெயர்தான் வீரத்துறவு என்பதா? துறவு வீரம் என்பது இதுதானா?

பெற்ற அன்னை மடிந்த செய்தி கிடைத்த பின்பும், மகாசந்நிதானத்தின் ஆன்மவிருப்பமான பறம்புமலைப் பள்ளி வளாகத் திறப்புவிழாவில் தாங்கள்.

மேகத்தின் கண்ணீராய் மழைத்துளிகள்
பெற்ற தாயின் பாசக் கண்ணீரா?
மகாசந்நிதானத்தின் ஆன்மநிறைவு ஆசீர்வாதமா?

நெஞ்சு கலங்கிப் போனேன். நினைத்து நினைத்து மருகுகிறேன்.

பட்டினத்தாரையே சுழற்றியடித்த பாசப்பிணைப்பின் சோகத்தை தாங்கள் வென்று நின்ற கம்பீரத்தில் நான் மெய் சிலிர்த்துப் போகிறேன்.

உங்களை இப்போது உயிரின் ஆழத்திலிருந்து கைகுவித்து வணங்குகிறேன்.

மக்கள் சேவையே மகேசன் சேவை என்று தங்க அரைஞாண் கொடியை தந்த மகாசந்நிதானம் ஓர் இமயம் என்றால், மாதாவின் மரணநாளின் தருணத்திலும் மக்கள் சேவையே முக்கியம் என்று நின்று நிலைத்த தாங்களும் ஓர் இமயம்தான்.

அருள் இமயம். மனிதநேயக் கருணைக்கடல். வாழும் மகாசந்நிதானமாக தாங்கள்.

தங்களை மனம் பணிந்து வணங்குகிறேன்.

– மேலாண்மை. பொன்னுச்சாமி.

திருவள்ளுவராண்டு 2038 வைகாசி "மக்கள் சிந்தனை" இதழில் "நெஞ்சில் நிற்கும் நினைவுகள்" என்ற தலைப்பு மடலைப் படித்தேன்; மறுமுறையும் படித்தேன். கண்ணீரைத் துடைத்துக் கொண்டு மீண்டும் படித்தேன். கடந்த கால நிகழ்வுச் செய்தியாக அது இல்லை; கல் மனத்தையும் கரையச் செய்யும் கால வரலாற்றுப் பெட்டகமாகத் தெரிந்தது.

குன்றக்குடித் திருமடம் தியாக பீடமாக மின்னுகின்றது. பள்ளிக்கூடக் கூரை வேய பத்து பவுன் தங்கச் சங்கிலி. அதைப் படிக்கும்போது காந்தியார் தென்னாப்பிரிக்கத் திருத்தொண்டுக்கு அளித்த அன்பளிப்பை தொண்டு நிதிக்குத் தந்த நிகழ்வு நினைவுக்கு வந்தது.

துறவிகள் தாயாரின் இறுதி நிகழ்வில் கலந்து கொள்ளலாம் என்பதற்குக் கடந்த காலச் சான்றுகள் பலவுண்டு. ஒரு பழம்பாடல் நினைவுக்கு வருகின்றது.

"அன்னை யானவள் தாதைக்கு அதிகம், அன்னையும் பிதாவும்
முன்னையோர் தெய்வம் என்ற மொழிக்கெவர் முதன்மைபூண்டார்
பின்னோர் ஆசிரமத் தேகில் பிதாவையும் வணக்கம் கொள்ளும்
சந்யாசி களாயினும் அத்தாயரைப் போற்றித் தொழுவரன்றே"

இந்த விதியினையும் மாற்றித் தொண்டுக்கு முதன்மை தந்த தகைமையை எப்படிப் போற்றுவது. தாய்ப்பாலை விட தமிழ்மாமுனிவர் தந்த தமிழ்ப்பால் வழி நடத்திய காட்சி கண்கலங்கச் செய்தது.

"பெற்றெடுத்த தாயின் இறுதி ஊர்வலம்; வரமாட்டான் என்பது போலப் பயணம். மழைத்துளிகள் வழியே மகாசந்நிதானம் வாழ்த்துவதாய் மனம் உணர்ந்தது". இவ்வார்த்தைகள் நெஞ்சைப் பிசைந்தன.

என் மனம் என்னைக் கேட்டது. இத்தகைய மாபெருந் தெய்வங்களின் நிழல் சாரப்பெற்றும் நீ எப்படி வாழ்கிறாய்? நாணம் சாம்ப வைத்தது. திருவடிகளுக்கு வணக்கம்.

- புலவர். **க. சண்முகம்.**

மக்கள் சிந்தனை - வைகாசி இதழின் முகப்புப் படம், வாழையடி வாழையாக - ஓங்குபுகழ் விழித்தோன்றலாக - குருமகாசந்நிதானத்தை அச்சு அசலாக நினைவூட்டுவதாய் அமைந்திருந்தது. பின்புலமாகத் தோன்றிய சமுதாய நலப்பணிகளின் சூழல், கத்திரி வெய்யிலையும் மறக்கடிக்கும்படியான பசுமையைக் காணவைத்தது!

நெஞ்சம் குளிர்ந்து அட்டையைப் புரட்டியதும் மூன்று பக்க நினைவலைகளாகக் காணப்பட்ட வரிகள், கண்களைக் குளமாக்கின. சுவரின்றி சித்திரம் உருவாகுமோ.... புனிதமான தாய்ப்பால் அருந்தி தமிழ்ப்பாலையும் உண்டு, நமக்கெல்லாம் அமுதமாகத் தமிழை


அன்னையார்
திருமதி.முத்துலெட்சுமி அவர்கள்

வழங்கினார்கள் குருமகாசன்னிதானம் அவர்கள்! அந்த மாமுனிவரின் திருவடிகளையே எவ்வேளையும் சிந்தித்ததன் பயன்தான் இன்றும் மகாசன்னிதானத்தின் மறுபிம்பமாக விளங்குகிறார்கள், நடமாடும் நம் குருமகாசந்நிதானம் அவர்கள்!

அத்தகைய அடிகளாரைப் பெற்றெடுத்த தாய் அமரத்துவமான சூழ்நிலையை சுருக்கமாக வெளிப் படுத்தினாலும் அன்பர்களின் மனமெல்லாம் பறம்புமலையில்தான் ஏக்கத்துடன் உலவிக் கொண்டிருக்கும். இதே சூழ்நிலையில் சான்றோர் பலர் நெஞ்சில் நிற்கிறார்கள்.

எங்களது சிறு விருப்பம் ஒன்றே ஒன்று. தொண்டு சீர் பரவுவாரான நடமாடும் நம் அடிகளின் அன்னையார் உருவத்தை, அடுத்த இதழில் வெளியிடுமாறு வேண்டிக்கொள்கிறோம்.

விண்ணகத் தெய்வமாய் மேவிட்ட அன்னையார், என்றும் நம் இதயக் கோவிலில் குடியிருந்து காத்தருள வேண்டும் என அஞ்சலி மலர்களை சமர்ப்பிக்கிறோம்.

– கலைமாமணி.நெல்லை. **ஆ. சுப்பிரமணியன்**

“மக்கள் சிந்தனை” வந்தவுடன் ஆர்வமாகப் படிப்பது திருப்பெருந்திரு அடிகளாரின் தலையங்கத்தைத்தான்! இம்மாதம் வான்வழி நீரால் நனைந்திருப்பது மண்ணகம் மட்டுமல்ல, அடிகளாரின் துறநெறியால் எம்போல்வாரின் நெஞ்சமும்தான்!

அட்டைப்படப் புகைப்படம் “மக்கள் தொண்டே மகேசன் தொண்டு” எனத் திருமந்திர ஓவியமாக நெஞ்சை நெகிழ்வித்தது. இதழின் பெயர் மட்டுமல்ல, உள்ளடக்கமும் மக்கள் சிந்தனையும் அதன்வழிச் செயலுமே!

சிறக்கட்டும் தொண்டு! செழித்தோங்கட்டும் சீர்சால் மரபு!

– **சு. சந்திரா**, மதுரை.

# ஒரு வேண்டுகோள்!

"தமிழ்ப் பண்பாட்டை மீட்டுருவாக்கம் செய்யத் தமிழக அரசுக்கு வேண்டுகோள்" பார்த்தேன். திரு.ம. மணிக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். கடந்த பதினைந்து ஆண்டுகளாகப் பல அரங்குகளில் தமிழறிஞர்கள் கல்வெட்டு, கோயிற்கலைகள் பற்றி ஈடுபாடு கொள்ள வேண்டுமெனக் கேட்டு வரும் எனக்கு, அறிஞர் பெருந்தகை திரு. தமிழண்ணல் அவர்களின் வேண்டுகோள் மகிழ்வித்தது என்றாலும், இந்த வேண்டுகோள் எந்த அளவிற்குப் பயன்தரும் என்பதில் அய்யம் இருக்கிறது. தமிழ்நாடு அரசின் வரலாற்று வல்லுநர் குழு, கல்வெட்டாய்வுக் குழு, ஆவண காப்பக ஆலோசனை குழு, பல்கலைக் கழகங்களின் தமிழ் மேம்பாட்டுக்குழு இவற்றின் செயற்பாடுகளை உள்ளிருந்து பார்த்த அநுபவம்தான் அய்யத்திற்குக் காரணம்.

அரசிற்கு வேண்டுகோள் வைப்பதைவிட ஆய்ந்தறிந்த அறிஞர் பெருமக்கள் இப்பணியைச் செய்வது பெரும்பயன் தரும். "பூசகர்" எனுஞ் சொல் வடசொல் அன்று என்பதை அறிஞர் தமிழண்ணல் எவ்வளவு விரிவாக விளக்கியுள்ளார். "பூசெய்" அறிஞர் வீ.ப.கா.சுந்தரனார் விளக்கி அறிந்தேன். "பூசுஜர்" இன்றுதான் தெளிவாயிற்று. இந்தத் தெளிவைத் தமிழாய்ந்த பெருமக்களே தரமுடியும். குன்றக்குடித் திருமடமே இவ்வரும் பணியைச் செய்யலாம். வணக்கத்திற்குரிய அருள்திரு குருமகாசந்நிதானம் அவர்களும் அறிஞர் பெருந்தகை திரு. தமிழண்ணல் அவர்களும் தகுதி சான்ற ஆய்வறிஞர் குழு கொண்டு இப்பணியை நாளையே தொடங்கலாம். இதன் வழித் தமிழின் சொல்வளம் பெருகுவதுடன் ஆய்வுக்கட்டுரைகளும் நற்றமிழில் அமைய வாய்ப்பேற்படும்.

தமிழ்நாட்டுக் கோயில்களிலிருந்து படியெடுக்கப்பட்ட முப்பதாயிரத்திற்கும் மேற்பட்ட கல்வெட்டுக்கள் இன்றுவரை வெளியிடப்பெறாமல் மைசூரிலிருள்ள கல்வெட்டு நிறுவனத்தில் சிதைந்து கொண்டிருக்கின்றன. 1909க்குப் பிறகு படியெடுக்கப்பட்ட இக்கல்வெட்டுகளின் பாடங்கள் இன்றியே தமிழ்நாட்டு வரலாறு எழுதப்பட்டு வருகிறது. இவற்றை வெளியிட வேண்டி, தமிழ்நாட்டரசின் முதலமைச்சர் மாண்புமிகு முதல்வர் முத்தமிழறிஞர் கலைஞர் பெருந்தகை அவர்களுக்கு எழுதியுள்ளேன். மாண்புமிகு நிதியமைச்சர் பேராசிரியர் திரு. க. அன்பழகன் அவர்களிடம் நேரிலேயே விளக்கி வேண்டுகோள் மடல் தந்துள்ளேன். இந்திய கம்யூனிஸ்ட்டு கட்சியின்

பெருந்தலைவர் தோழர் நல்லகண்ணு அவர்கள், அரங்கமொன்றில் நான் ஆற்றிய உரைகளையும் வைத்த வேண்டுகோளையும் கேட்டுத் தாமே முன்வந்து விவரங்கள் பெற்று மாண்புமிகு முதல்வரிடம் நேரிடையாகத் தந்துள்ளார்கள். இவையெல்லாம் நிகழ்ந்து ஆறு திங்கள்கள் ஓடி விட்டன.

இந்த முயற்சிகளைக் கடந்த பத்தாண்டுகளாகப் பல தளங்களில் நான் செய்துவருகிறேன். இன்றுவரை பயனில்லை. முயற்சிகளில் தோற்றுப்போய், என்வரை என் தமிழுக்கு என்ன செய்யமுடியுமோ அதைச் செய்வதில் நிறைவு கண்டு வருகிறேன். இதுபோன்ற அனுபவ வரிகள்தான் அறிஞர் தமிழண்ணலின் அரசுக்கான வேண்டுகோள் நிறைவேறுமா என்பது குறித்த அய்யத்தைத் தந்துள்ளது.

தமிழைச் செழுமைப்படுத்த ஆர்வமுள்ளவர்கள்தான் முயலவேண்டும். எளிய அளவினதாக இருந்தாலும், ஏதேனும் அமையும். தமிழைச் செழிக்கச் செய்யும் முயற்சிகளின் முதல் அறிவிப்பை அடுத்த "மக்கள் சிந்தனை" இதழில் எதிர்ப்பார்க்கலாமா?

**- இரா. கலைக்கோவன்**

"மக்கள் சிந்தனை" சிறப்பாசிரியர் அவர்கள் 8.6.2007ல் தமிழ்மொழி மேம்பாட்டு வாரியத் தலைவருக்கு இதுகுறித்து வேண்டுகோள் கடிதம் எழுதியுள்ளார்கள். பொறுத்துப் பார்க்கலாம்

**- ஆசிரியர்**

"மக்கள் சிந்தனையில்" முனைவர் மு. பழனியப்பன் எழுதிய "வைப்புமுறை மாற்றத்தக்கதா" என்ற கட்டுரையும், அக்கட்டுரைச் செய்தியை மறுத்து முனைவர் இரா. அறவேந்தன் எழுதிய "திருவள்ளுவம் ஓர் ஆய்வு நூல்; பதிப்பு நூல் அன்று" என்ற கட்டுரையும் வெளியிடப்பெற்றன. இவற்றைத் தொடர்ந்து அறிஞர் பலர் அக்கட்டுரைகளை ஆதரித்தும் மறுத்தும் "மக்கள் சிந்தனை"க்குக் கட்டுரைகள் அனுப்பியுள்ளனர். இத்தொடரைத் தொடரவேண்டியதில்லை என்று "மக்கள் சிந்தனை" கருதுவதால் தொடர்ந்து வந்த கட்டுரைகளை வெளியிட இயலாமைக்கு வருந்துகிறோம். கட்டுரைகள் அனுப்பிய அறிஞர் பெருமக்கள் பொறுத்தருள வேண்டுகிறோம்.

**- ஆசிரியர்**

உ
சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது

## பழநி

### பரிமள விலாஸ்

# S. சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி
## &
## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தநாதன் சன்ஸ்**
**அடிவாரம், பழநி — 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

குன்றக்குடி - 630 206

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொசைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கையாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 30. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

# தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

## *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - June 2007 Price Rs. 5-00
Date of Publication 20-06-2007
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் மடாலயம்
கோவிலூர்
காரைக்குடி (வழி) அவர்கள்

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166